# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் உரு | திருவள்ளுவர் யாண்டு கக அக<br>பங்குனி<br>1950—மார்ச்சு | மலர் ௰உ |

## பொழிற்றெண்டர் கருத்துரை

## நன்றியுரை.

திருவருளால் இந்த மலரோடு இருபத்தைந்தாவது துணர் நிறைவுறுகின்றது. இதுகாறும் அன்புநீர் பாய்ச்சி நம் பொழில் செழிப்புறச் செய்த அன்பர்கள் எல்லாருக்கும் எம் உளமார்ந்த நன்றி உரித்தாகும். என்றும் குறையா அன்பு மேம்பாடுடைய அன்பர்கள் நம் பொழிலிடத்து நாளும் நாளும் பெருக ஆதரவு காட்டி வளம்பெறச் செய்வார்களென்று நம்புகிறோம்.

தமிழ் மேம்பாட்டிற்கும், தமிழர்கள் சிறப்பிற்கும் அடிப் படையாகத் தொண்டு புரிந்துவரும் நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் வெளியீடாகிய நம் பொழில் இந்தத் துணரோடு இருபத்தைந்தாண்டு பணியாற்றி வந்திருக்கின்றது. அறி ஞர்களின் கட்டுரைகளைத் தந்தும், பழைய புதிய நூல்கள் வெளியிட்டும், தமிழாக்கங் கருதிப் பல முடிபுகளைத் தந் தும், நம் தமிழன்னைக்கு நேர்ந்த குறைகளைத் தடுத்தும்,

சிறப்பினைப் பெருக்கியும், இன்னும் பல துறைகளிலும் தமிழ்த் தாய்க்குத் தனித்தொண்டு ஆற்றிப் பணி புரிந்து வந்திருக்கின்றது.

நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஒப்புயர்வற்ற தொண்டுகளையும், அதற்குத் துணையாக நம் தமிழ்ப் பொழில் ஆற்றி வந்த பணிகளையும் சிங்க நோக்காகப் பார்க்கும்போது தமிழன்பர்கள் எல்லாருக்கும் இறும்பூதும் தனி மகிழ்ச்சியும் உண்டாகும் என்பது ஒருதலை.

* * * * *

இவ்வாண்டில் நம் தமிழ்ப் பொழிலின் வெள்ளி விழாக் கொண்டாட வேண்டுமென்பது நம் அன்பர்கள் பலர் விருப்பமாகும். அங்ஙனமே செய்தல் பொருத்தமும் ஆம். வெள்ளி விழாக் கொண்டாடுவதுடன் தமிழ்ப் பொழில் வெள்ளி விழா மலர் ஒன்றும் வெளியிட எண்ணுகின்றார்கள். இவற்றிற்கான வழிகளில் முயற்சி நடைபெறுகின்றது.

* * * * *

அடுத்த சித்திரையில் தொடங்க விருக்கும் இருபத்தாறுவது துணர், பழைய மணத்துடன் புது மணம் பரப்பிக் கண்ணுக் கினிமையாகவும், கருத்துக்கு மகிழ்வு தருவதாகவும், வாழ்க்கைக்குப் பொருத்தமாகவும் வெளிவர விருக்கின்றது. தமிழ்மக்களெல்லாரும் பாராட்டி ஆதரித்து மகிழ்வார்களாக.



# பதிப்பாசிரியரின் பரிவுரையாளருக்குத் தெளிவுரை.

**வித்துவான். வி. அ. அரங்கசாமி, தமிழ்ப் பேராசிரியர்,**
**அரசர் கல்லூரி. திருவையாறு.**

'பதிற்றுப் பத்தும் பதிப்பாசிரியரும்' என்ற தலைப்பில் யான் தமிழ்ப்பொழிலில் எழுதிய கட்டுரைக்கு வித்துவான் கோபாலர் என்பவர், பதிப்பாசிரியர் கருத்து தக்கது என்று கூறுமுகத்தான், ஒரு மறுப்பு வெளியிட்டுள்ளார். இங்ஙனம் பரிவுளங் கொண்டு வெளியிட்ட கருத்து, அவரன்னாரின் அறிவிற்கும் ஆக்கத்திற்கும் அரணாவதன்றித் தமிழரின் ஆன்ற நெறிக்கு அரணாகாது. விருப்பு நிலையால் விளம்பலுறுவார்க்கு வேட்டது விளங்கித் தோன்றுமே யன்றி, நற்றமிழியல் நாடும் நாட்டந் தோன்றாது. எண்ணி யுண்மை காணாத வழக்குரைக்குச் சான்று தந்து, பழந் தமிழரின் பண்பாட்டினை அழிக்கும் முயற்சி யகலவேண்டு மென்பதென் கருத்தாகும். இக்கருத்தினைப் பரிவுரையா ளர் படித்தறிந்திருப்பின் எற்கு இக் கட்டுரைநிகழ்த்த இடமிருந்திராது. பழந்தமிழியல் தரும் பண்பாட்டிற் கேற்பச் செய்யுட் கருத்தினை யறிந் தின்புறலே ஆன்ற சான்றோர் கடனாம்.

என் கருத்துக்களை மறுத்தவர்க்கு விடைதருமுன், அவர், யான் எழுதிய நடையில் பிழை பாடுகள் மலிந்துள வென்று தாம் எண்ணிய வாறே தங் கோள் கூறிய எண்மையை விளக்கி மேற் செல்ல எண்ணுகின்றேன். தொடரமைத் தெழுதுவதில் தாம் வரப்பெனத் தம்புகழ் கொண்டு காட்டிப் பயனிலாதன பற்பலவும் வீணே கூட்டி வரைந்த பரிவுரையாளரின் நடை ஒழுகும் நிலையில் நண் பர்கள் நாட்டங் கொண்டு மதித்திடற்கே சிலவற்றைத் தருகின்றேன்.

ஒன்று இரண்டு என்னுஞ் சொற்களின் திரிபாகிய ஒரு, இரு என்னுஞ் சொற்களின் முன்னர், உயிர்முதன் மொழிவரின், உகரம் கெட்டு முதனீண்டு முடியு மென்பதும், யகர மொழிந்த மெய்களை முதலாகவுடைய சொற்கள் வரின் இயல்பாய் முடியு மென்பதும் தமிழியல் தரும் முடிபு. அம் முடிபினை யறிவிக்கும் நூற் பாக்கள் வருமாறு.

முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவலென மொழிப வுகரக் கிளவி
முதனிலை நீட லாவயி னான. (தொல். எழுத். 455)

அதனிலை யுயிர்க்கும் யாவரு காலை
முதனிலை யொகர மோ வாகும் மே
ரகாத் துகரம் துவரக் கெடுமே. (தொல். எழுத். 849)

முதனிலை யெண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞநமத் தோன்றினும் யவவந் தியையினும்
முதனிலை யியற்கை யென்மனார் புலவர். (தொல். எழுத். 478

இங்ஙனம் ஆசிரியர் தொல்காப்பியர் மூன்று நூற் பாக்களால் வலியுறுத்திக் கூறியது கற்பாருக்கு இவ் விதியில் நெகிழ்ச்சி யிருத்தலாகா தென்பதற்கே யாம். இங்ஙனமிருக்கப், பரிவுரையாளர், 'ஆரியர் என்ற ஒரு இனத்தாரைக் குறிக்க வழங்குவதாயிற்றே; இவ் வடியில் இனத்தைக் குறிக்கின்றதா அல்லது அவ் வினத்துள் ஒரு உட் பிரிவைக் குறிக்கின்றதா..........குறித்தார்' எனத் தொடர்மொழிகளைத் தம் கட்டுரையில் வரையுங்கால், ஒரு இனத்தாரை, ஒரு உட்பிரிவை என ஈரிடங்களில் கழுவாய் கூற முடியாத வழு வமைத்து வரைந்துள்ளார்.

இவர், 'இங்ஙனம் நல்லிசைப் புலவர்களது செய்யுட் களை....' எனத் தொடரமைக்குங்கால் புலவர்களது எனப் புகன்றது இயலறியா மயலுடைமையாலே யாம். இங்ஙன மாகத் தம் குற்றம் காணாத் தன்மையாளராகிய பரிவுரை யாளர் வழுக்கள் பல கண்டதாக வாய்ப் பறை யடிப்பது அவர்தம் அறிவுக்குப் பொருத்தமாகா தென்க.

பதிப்பாசிரியர், 'ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்' என்றவிடத்து ஆரியர் என்ற சொற்கு முனிவரென் றுரை கூறியது பரிவுரையாளர் போன்ருருக்கே யாம். அன்னவரின் முன்னறிவிற்கே இங்கே என ஒரு சொற் பெய்து குறிப் புரை தந்தனர். எங்ஙனம் கூறினும் முனிவர் என மொழிந்தது பொருந்தாது என்பதும் வட வாரியரையே குறிக்கு மென்பதும் என் கருத்தாம். இங்ஙனம் இங்கே என்றிசைத்து மயக்க முறுத்து மியலினை இனியும் தமிழர் கண்டு ஏமாற்றம் அடையார். அதன் வழியே ஏற்றங் காண விழையும் பரிவுரையாளர் பண்பில் கருத்திற்கும் இட மளியார் இன்றமிழ் நாட்டார். இனிப் பரிவுரை யாளர், யான் கூறிய முதல் கருத்தை விடுத்து, ஆரியர் என்பதற்கு முனிவர் என்ற வுரை பொருந்தாது என்ப தனைக் குறிக் கொண்டது கொண்ட வறிவின் கொள்கை பற்றியே யாம். கவரிமா கனவு காண்பதற்கு ஆரிய ராணை காரணமாம் என்ற பழைய வுரைகாரர் கருத்தினை மறுத்து, கனவு காண்டற்குரிய காரணத்தையும் விளக்கி யிருக் கின்றேன். ஆயின் பழைய வுரையின் வழியே ஏற்றங் காண விழையும் பதிப்பாசிரியர் ஆரியர் என்ற சொற்கு முனிவர் எனக் குறிப்புரை கூறியுள்ளார். அதற்குச் சான்று சங்கச் செய்யுளினின்றும் சாற்றப்படவில்லை. ஆரியர் என்ற சொல்லுக்கு முனிவர் என்ற பொருள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களிற் காண்டற் கருமையை யறிந்த பதிப்பாசிரியர் இங்கே என ஒரு சொல்லிட்டு எழுத வேண்டியதாயிற்று. இஃதறியாத பரிவுரையாளர், ஆரியர் என்ற சொல்லாட்சி முனிவர் என்ற பொருள் தருதற்குச் சான்று காட்டாது, அந்தணர், மறைகாத் தோம்புநர் என்ற சொற்களாட்சி பெற்ற அடிகளைக் காட்டி அக மகிழ்வு கொள்ளும் திறன் என்னே! அவர் காட்டிய ஈரிடங்களி லும் தீ வளர்த்தலைக் கூறியமையின் முனிவரென மொழித லமையும். ஈண்டு ஆரியர் என்றே கூறுவதால் நாட்டின ரைக் குறிக்கும் என்ற என் கருத்திற்கு அவர் காட்டுக்களே சான்ருதலறிக. எனவே படித்துப் பாடம் பண்ணிப் பாலர் நிலையிலிருந்து ஒப்பிப்பார் போல, இயையினும் இயையாவிடினும் ஏதோ வொன்றை எடுத்துக்காட்டி எழுதிச் செல்லும் இயல்பு அறியப்படுகின்றது. மேலும் இமய மலைச் சார்பாலும் ஆரியர் முனிவ ராகார் என்பது பின் வரு மடிகளாலும் தெளிவுறும். ஆரியர் என்ற சொற்கு

முனிவர் என்ற பொருள் சங்க இலக்கியத்து யாண்டும் காணப்பட்டிலது. ஆரியர் என்ற சொல்லாட்சி யமைந்த அடிகள் வருமாறு.

'மாரி புறந்தா ரூந்தி ஆரியர்
பொன்படு நெடுவரை புரையும்'

'தாரும் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங் களிறுபோல'

'ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்று முதிர் வடவரை வணங்குவிற் பொறித்து'

'ஆரியர் படையின் உடைக'

'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்'

'ஆரியர் கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி'

'பேரிசை மாபினாரியர் வணக்கி'

'ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை'

'எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன் வேறு கிடக்கை நோக்கி'

இங்ஙனம் பலவிடங்களினும் ஆரியர் என்ற சொல்லாட்சி யமைந் திலங்குகின்றது. மேற் கண்ட அடிகளுள் ஓரிடத்தானும் ஆரியர் என்ற சொற்கு முனிவர் என்ற பொருள் தனித்தானும் சார்பானும் பெறப்படாமை கண்டு தெளிக.

மேலும், பரிவுரையாளர், 'ஆரியர் வணக்கி' என்ற பதிகத்துற்றவடி சான்றாகா தெனற்குப் பதிகம் பாடிய புலவர் பதிற்றுப்பத்துப் பாடிய புலவர்களிலும் வேறாயவர் எனக் காரணம் காட்டுகின்றார். பதிகம் பாடியவர் யாவராயினும், பதிகம் நூலுட் காணப்படுதலானும்,

(393 ஆம் பக்கம் பார்க்க.)

# இசைத் தமிழ்ப் பாடல். 8.

குமர குருபரசுவாமிகள் அருளியது.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ். (திருப்புள்ளிருக்குவேளூர்.)

இசையாளர் சங்கீதம் திரு. ப. சுந்தரேசன், கும்பகோணம்.

## வருகைப் பருவம்.

*சந்தக்குழிப்பு = தனன, தனன, தனன, தனன, தனன, தனன, தனதன.*

பண்: குந்தலவராளி.

*இராகம்: குந்தலவராளி.]*
*28-ஆவது*
*அரிகாம்போதியில் பிறந்தது.*

*ஆ.— ச ம ப த நி த ச்*
*அவ.— ச் நி த ப ம ச*

*[தாளம்: கண்டசாதி சம்பை.*
*எட்டு எண்கள்*
*(நடை மூன்றெண்) தாள*
*அங்கங்கள்.*

லகு அனுத்திருதம் திருதம்
|5. ‿. O

௧

உலகு குளிர வெமது மதியி லொழுகு மமுத கிரணமே
உருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே.
அலகில் புவன முடியும் வெளியி லளியு மொளியி னிலயமே
அறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே.

௨

இழுமெ னருவி சொரியு மிமய முதல்வி புதல்வன் வருகவே
இயலு நடையும் வடிவு மழகு மெழுத வரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
ஒருவ னிருவ ரொடுகை தொழுந லுபய சரணன் வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியு நகையன் வருக வருகவே
விளரி பயிலு மளியு ஞிமிறும் விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே.

முதலடி.

| ।₅ லகு | ◡ அனுத்திருதம் | ○ திருதம் |
|---|---|---|
| சசச மமம மபப ததத தநித | பதப | மபம மா , ‖ |
| உலகு குளிர எமது மதியில் ஒழுகும் | அமுத | கிரணமே ‖ |
| ச்ச்ச் நிநிநி தநித பதப தநித | மபத | மபம மா , ‖ |
| உருகும் அடியர் இதய நெகிழ உணர்வில் | எழுநல் | உதயமே , ‖ |

உலகு= பா=

துணையடி.

| | | |
|---|---|---|
| மநித ச்ச்ச் நிதத ச்ச்ச் நிதச் | ச்ம்ம் | ச்ச்ச்சா , ‖ |
| கலையும் நிறையும் அறிவு முதிர முதிரு | மதுர | நறவமே , ‖ |
| ம்ம்ம் ச்ச்ச் தநித ச்ச்ச் மநித | மபத | மபமமா , ‖ |
| கழுவு துகளர் முழுக நெடிய கருணை | பெருகு | சலதியே, ‖ |

உலகு= பா=

கடையடி.

| | | |
|---|---|---|
| சசச மமம சசச பபப தநித | பதப | மபமமா, ‖ |
| அலகில் புவன முடியும் வெளியில் அளியும் | ஒளியின் | நிலையமே, ‖ |
| ச்நித நிதத தநித பதப நிதத | தபம | பதம மா, ‖ |
| அறிவுள் அறிவை அறியு மவரும் அறிய | அரிய | பிரம மே, ‖ |
| மநித ச்ச்ச் நிதத ச்ச்ச் நிதச் | ச்ம்ம் | ச்ச்ச்சா, ‖ |
| மலையின் மகள்கண் மணியை யனைய மதலை | வருக | வருகவே, ‖ |
| ம்ம்ம் ச்ச்ச் தநித ச்ச்ச் தநித | தபம | தபம மா, ‖ |
| வளமை தழுவு பருதி புரியின் மருவு | குமரன் | வருகவே, ‖ |

உலகு= பா=

இதன் இரண்டாவது பாடலையும் முதலடி துணையடியாகப் பிரித்து இதே யிசையிற் பாடுதல் நன்று.

---

# இசைத் தமிழ்

திரு. சங்கீதம் ப. சுந்தரேசன்,
தேவார இசை யாசிரியர், அரசர் கல்லூரி, திருவையாறு.

(முற்றொடர்ச்சி துணர் உ௰௫—மலர் ௰௧, பக்கம் 358)

## அலகு முறைகள்.

ஆ :— சிறுவர்களே! உங்கள் விருப்பத்திற்கிணங்க யானே கூறுகின்றேன். இரண்டாங் கருவியின் முதல் நரம்பினொலிக்கு முதற்கருவியின் குரல் நரம்பினொலி இரண்டலகு கூடி ஒலிக்கின்றதென அறிந்தோம். இங்கு, முதற் கருவியின் முதல்நரம்பினொலியையும் இரண்டாங்கருவியின் முதல் நரம்பினொலியையும் நாம் அளந்தறியவேண்டும். ஆதலான் முதற்கருவியை வைத்திருக்கும் மாணவர் தன் கருவியில் முதல்நரம்பைத் தெறிக்க, இரண்டாங்கருவியை வைத்திருக்கும் மாணவர் தனது கருவியில் முதல்நரம்பைத் தெறிக்க வேண்டும். மேலும் இடையிடையே முதற்கருவி மாணவர் தன்கருவியின் இரண்டாம் நரம்பாகிய குரல் நரம்பையும் தெறித்து ஆக மூன்று நரம்போசைகளினிடையே அமைந்த ஒலியினையளந்து அதன் இடையலகு அமைப்பைக் கூறவேண்டும்.

சி :— ஐயா,, அவ்வாறே தெறித்தறிந்து கூறுகின்றோம். (நரம்புகளைத்தெறித்து) இரண்டாங்கருவியின் முத நரம்பின் ஒலிக்கு முதற்கருவியின் குரல் நரம்பு (இரண்டாம்நரம்பு) இரண்டலகு கூடி யொலிப்பது போன்றே முதற்கருவியின் முதல்நரம்பின் ஒலிக்கு இரண்டாங்கருவியின் முதல்நரம்பொலி இரண்டலகு கூடுதலாக, ஒலிக்கின்றது.

ஆ :— சிறுவர்களே! அதுவே நமது ஆராய்ச்சியாகும். இனி யாவற்றையும் கூறிவிடுகின்றேன். முதற்கருவியில் அமைந்துள்ள நரம்புகளின் ஒலிக்கு இரண்டாம்கருவி யின் நரம்புகள் யாவும் இரண்டிரண்டலகு கூடுதலாக ஒலிக்கும். யாவையும் ஒருமுறைதெறித்து யான் கூறியது உண்மைதானு! எனக்கூறுங்கள்.

சி :— (இருமாணுக்கர்கள் தங்கள் கருவிகளை மாறி மாறித் தெறித்து) ஐயா ஆம் தாங்கள் கூறியது உண்மையே.

ஆ :— சிறுவ, இருக்கட்டும். நாம் ஆராய்ந்து காண முற்படுவது சிறந்த கணிதமுறையாகும். கணிதமுறைகள் பிறழாது அளவு ஒத்துவந்தால்தான் ஒலிநுட்பங்களை நன்கு அறியக்கூடும். நிற்க, முதற்கருவியிலமைந்த தார நரம்பாகிய முதல்நரம்பிற்கும் குரல் நரம்பாகிய இரண்டாம் நரம்பிற்கும் இடைவெளியலகு இன்னதென அறிந்தீர்களா?

சி :— ஆம் ஐயா அறிந்தோம். நான்கலகு.

ஆ :— எவ்வாறு?

சி :— (முதற்கருவிச்சிறுவன்) ஐயா எனதுகருவியின் முதல்நரம்பொலிக்கு இரண்டாங்கருவியின் முதல்நரம்பொலி இரண்டலகு. அந்நரம்பிற்கு எனது கருவியின் இரண்டாம் நரம்பினொலி இரண்டலகு. ஆக எனது கருவியின் முதல் நரம்பிற்கு இரண்டாம்நரம்பு நான்கலகு.

ஆ :— மாணவச்சிறுவ! மிகவும் மகிழ்வு மற்றக் கருவியாளர்கள் இருக்கட்டும். நீ மட்டும் உனதுகருவியில் முன் னர் இயற்கையிலமைந்த ஏழிசைகளின் இடங்களில் அமைந் துள்ள அலகுமுறையைக் கூறுவாயாக.

சி :— ஐயா அப்படியே. (நரம்புகளைத்தெறித்து) ஆம் ஆம் ஒலியளவின் நுட்பங்கள் அடியேனுக்கு நன்கு விளங்கி வருகிறது. இங்கு ஏழிசைகளையும் தெறித்தால்

தாரத்திற்கு குரல் (நரம்பு) நான்காம் அலகு. குரலுக்கு துத்தம் நான்காமலகு. துத்தத்திற்கு கைக்கிளை நான்காமலகு, கைக்கிளைக்கு உழை ஓரலகு.

மற்றொரு சிறுவர்:— (இடைமறித்து) என்ன என்ன ஓரலகா!

சி:— ஆம் ஒருஅலகுதான். என்ன உனக்கு ஐயம்! பழையகால இசையமைப்பை நமது ஆசிரியர் கூறிக்கொண்டு வரும்பொழுது நீ நன்கு கேட்கவில்லைபோலும்.

ஆ:— மாணவ! இருக்கட்டும் ஏதேனும் ஒரு நுண்கலையைப்பற்றி ஆராயும்போது எவருக்கேனும் ஐயப்பாடு ஏற்பட்டால் அவ்வையத்தைத் தெளிவுபடுத்திப் பின்னரே மேற்செல்ல வேண்டும். நீயே அம்மாணவனுக்கு பழைய இசையமைப்பை மீண்டுமொருமுறை கூறிவிடுவதே சாலச் சிறந்தது.

சி:— ஐயா அப்படியே கூறுகின்றேன். தம்பி! ஓரலகா? எனக் கேட்கின்றனையே; மிகப் பழமையான காலத்தில் அதாவது நம் நாட்டில் பழைய வில்யாழில் ஐந்து நரம்புகள் கட்டி யமைத்து வழங்கிய காலத்தில் ஐந்திசைகள் தாமே இருந்தன! அவை தாரம், குரல், துத்தம், உழை, இளி என்பவைகள் தாமே! அவற்றுள் தாரமும் குரலும், குரலும் துத்தமும், அளவொத்து நிற்க, துத்தத்திற்கு உழை அளவு கூடி நிற்க. பின்னர், ஏனைய இசை போன்றே, இதனையும், அளவொத்த முறையில் ஆக்க புதிய இசையாகிய கைக்கிளை தோன்றியது; இங்கே துத்தமும் கைக்கிளையும் அளவொத்து நிற்க. உழையானது கைக்கிளைக்கு ஒரு கொடி யளவில் அமைந்துவிட்டது. அந்த ஒரு கொடி யளவின் முறையாற்றானே நாம் இத்தகைய பெரிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு கொடியளவு (அலகு) ஏழிசையில் எவ்வளவு உளதென ஆராயமுற்பட்டோம்!!

மற்ற சி :— ஆம். ஆம். மறந்தேன். மன்னிக்கவேண்டும் இனி நன்கு அறிகின்றேன்.

சி :— (இங்கு ஆசிரியரை நோக்கி) ஐயா. உழைக்கு இளி நான்காம் அலகு. இளிக்கு விளரி நான்காம் அலகு. பின்னர் விளரிக்கு மேற்றானத்தாரம் ஓரலகு.

ஆ :— சிறுவ. மகிழ்ச்சி, இனி ஏழிசைக்கும் மொத்த அலகுகள் எவ்வளவு? அவைகளை முறையாக இந்த மணற் பரப்பில் வரைந்து காட்டுவாயாக, முதலிசையைத் தொடக்கம் என வைக்கவேண்டும்.

சி :— ஐயா. அப்படியே. முதலிசையின் குறியை வட்டக் கோடிட்டு, பின்னர் உள்ள இசைகளின் பெயர்களை எழுதி அதனதன் கீழே அலகுகளை எழுதுகின்றேன், யாவையும் அடைப்பினுட் காட்டுகின்றேன்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இசை எண்கள் | ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ |
| இசைப் பெயர்கள் | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி |
| அலகுகள் | 0 | ௪ | ௪ | ௪ | ௧ | ௪ | ௪ |

ஐயா, இவ்வாறு இசைகளின் அலகுகள் அமைகின்றன. இத்துடன் மேற்றானத்து தாரத்திற்கு விளரியிலிருந்து ஓரலகு உளது. அதனை யான் இங்கு குறிக்கவில்லை.

ஆ :— சிறுவ. விளரிக்கும் தாரத்திற்குமிடை யமைந்த அலகினையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது தான் ஒரு தானத்திடை யமைந்த அலகு எவ்வளவு என அறிதல் கூடும். நிற்க, அதனையும் சேர்த்து எல்லா அலகினை யும் கூட்டி கூட்டுத் தொகையினை அறிவிப்பாயாக.

சி :— ஐயா, தாரத்திலிருந்து குரல் நான்கு, குரலி லிருந்து துத்தம் நான்கு. ஆக எட்டு, துத்த மிருந்து கைக்கிளை நான்கு ஆக பன்னிரண்டு. கைக்கிளையிலிருந்து உழை ஒன்று

ஆக பதிமூன்று. உழையில் இருந்து இளி நான்கு ஆக பதினேழு, இளியிலிருந்து விளரி நான்கு. ஆக இருபத்தொன்று. விளரியி லிருந்து மேற்றுனத்தாரம், ஒன்று. ஆக இருபத்திரண்டு அலகுகள் மொத்தமாயின,

ஆ :— மிகவும் மகிழ்ந்தோம். மாணவ. இவ்வாறு அமைவுற்ற ஏழிசைகளின் ஒருதொகுதியை நமது முன்னோர் இயக்கம் எனவும், தானம் எனவும் கூறினர். ஓரியக்கத்தினுள் முதலிசையை ஓரோவழி ஓசையாகக் கொண்டு அதற்கு எட்டாமிசையாகிய தாரம் வரை ஒலி நுட்பங்களை இவ்வாறு ஆராய்ந்தறிந்தால் இருபத்திரண்டு ஒலி நுட்பம், அதாவது கூடுதல் கூடுதலாகஒலிக்கக் காண்கின்றோம். அஃதிருக்கட்டும் இவ்வாறு நாம் ஆராய்வதற்கு எந்த எந்த நரம்புகளை முதன் முதலாக இசைத்தோம். ?

சி :— நின்ற நரம்பிற்கு ஐந்தாம் நரம்பை இசைத்தோம் அதாவது தாரத்திற்கு உழை நரம்பை, பின்னர் ஒவ்வொன்றி னுக்கும் ஐந்தாம் நரம்பை இசைத்தோம்.

ஆ :— ஐந்தாம் நரம்பை நமது முன்னோர்கள் எவ்வாறு கூறினர் ?

சி :— கிளை யென்று.

ஆ :— முன்னர்க் கூறியபடி நின்ற நரம்பிற்கு ஐந்தாம் நரம்பு வரை எத்துணை அலகுகள் பொருந்தி யுள்ளன ?

சி :— ஐயா. பதின்மூன்றலகு.

ஆ :— ஆம். இனி எந்தக்கருவியிலேனும் நரம்புகள் கட்டி ஆராய்ந்தால் நின்ற நரம்பிற்கு கிளை நரம்பு அளவொத்த முறையில் அமைந்தால், அதனலகுகள் பதிமூன்றாக இருத்தல் வேண்டும். அன்றேல் யாவும் பிழைபடும். இனி கிளையிசையி லிருந்து மேற்றுனத்தாரம் வரை இசை யெத்தனை ? அலகுகள் எத்தனை ?

சி :— கிளையிசையிலிருந்து மேற்றுனத்தாரம் நான்கா மிசையாகும் இதனிடை யமைந்த அலகுகள் ஒன்பது.

ஆ:— ஆம். நின்ற நரம்பிற்கு நான்காம நரம்பை நமது முன்னோர்கள் நட்பு எனக் கூறினர். நட்பு நரம்பு ஒன்பது அலகாதல் வேண்டும். ஓரியக்கத்தில் ஒரு கிளையும் ஒரு நட்பும் அமைதல் வேண்டும். இவ் வமைப்பினை பிற்காலத்தில் நட்பும் கிளையுமாகவும் கணித் தறிகின்ற வழக்கும் நம்மிடையே உண்டு. இனி அலகு முறைகளை கிளை முறையாகக் கூட்டிச் செல்ல ஒவ்வோரிசைக்கு அமைந்த அலகு இன்னதென அறியலாம். அதனையும் இங்கு சுருங்கக் கூறுகிறேன்.

நின்ற நரம்பிற்கு கிளையின் அலகு ௰௩ கிளையின் கிளை ௰௩ கூட்டு ௰௩ ஆக உ௰௬ இதுவே மேற்றானத்துக் குரலாகும். தானத்திடை யமைந்த உ௰உ அலகு கழிய ௪ அலகு ஆகும். இதுவே குரல் நரம்பாகும் குரலுக்குக் கிளையாகிய இளியின் அலகு ௪ கூட்டு ௰௩ ஆக ௰௭ அலகு ஆகும் இளியின் கிளையாகிய துத்தத்தின் அலகு ௰௭ கூட்டு ௰௩ ஆக ௩௰ அலகு ஆகும். இதுவே மேற்றானத்து துத்த நரம்பாகும் ௩௰ அலகில் தான அலகு உ௰உ கழிய ௮ அலகு துத்த நரம்பிற் கமைந்ததாகும் துத்தத்தின் கிளையாகிய விளரியின் அலகு ௮ கூட்டு ௰௩ ஆக உ௰௧ அலகு ஆகி விளரியாக நிற்கும் விளரியின் கிளையாகிய கைக்கிளை உ௰௧ கூட்டு ௰௩ ஆக ௩௰௪ அலகு ஆகும். இதுவே மேற்றானத்து கைக்கிளை யாதலால் தான அலகு உ௰உ கழிய ௰உ அலகு ஆகி கைக்கிளை யாகும். நிற்க இவ்வாறே கிளைக்குக் கிளையாக கணித்துச் செல்ல அந்தர வகைகள் காண வாய்ப்பு ஏற்படும் அந்தரங்கள் முறையே அமைவுறவே அலகு முறைகள் காண நேரிட்டது. இனி நீங்கள் இத்துடன் நின்று விடாது கருவிகளில் கணித முறை பிறழாது நரம்புகள் கட்டி யிசைத்து ஓசை நுட்பங்களை நன்கறிதல் வேண்டும்.

சி:— ஐயா உணர்ந்தோம். கிளையலகு ௰௩ (அதாவது நின்ற இசைக்கு ஐந்தாமிசை) நட்பலகு ௯ (அதாவது நின்ற இசைக்கு நான்காமிசை) கிளையலகின் தொகையாகிய பதின்மூன்றினை ௰௩ ௰௩ ஆகக் கூட்டிச் செல்லுவதால் மற்ற இசைகளின் அலகுகள் இன்னதென அறிய வாய்ப்பேற்படுகின்றது. பின்னர் நட்பலகாகிய ௯-தையும் இவ்வாறு கூட்டிச் சென்று கணக்கிடலாமோ?

ஆ :— சிறுவ. கணக்கிடலாம். ஆனல் நம் முன்னோர்களால் முதன் முதலாகக் கணித்தறிந்தது கிளைமுறை தான் நட்பு முறையையும் ஆராய்ந்தார்கள் அதனையும் வேண்டுமானாற் கூறலாம்.

சி :— ஐயா கிளைமுறை யறிந்தோம் நட்புமுறையையும் அறிய ஆசைப்படுகின்றோம். இங்கு முதற் கருவியின் அமைப்பை அறிந்ததுபோல் மற்ற மூன்று கருவிகளைப் பற்றியும் முதலில் அறிய விரும்புகிறோம்.

ஆ :— ஆம் ஆம் மாணவர்களே நட்பு முறையை பின்னர் கூறுகின்றேன். இங்கு உங்களுடைய நான்கு கருவிகளிலும் அமைந்த அலகுகளை அட்டவணைப் படுத்திக் கூறுகின்றேன். யாவும் முதற் கருவியைச் சார்ந்து தான் அமைந்துள தென்பதை மறத்தல் கூடாது. ஏழிசைகளோடு ஐந்து அந்தரங்களும் சேர்ந்து பன்னிரண்டு இசைத் தானங்கள் ஆயின. இனி யாவையும் ஒருங்கு சேரக் காணுவாம்.

ஆ :— சிறுவர்களே மேலட்டவணைக் குறிப்பை நன்கு அறிந்து உளங் கொளல் வேண்டும். மேற் குறித்த பன்னிரண்டிசைத்தான அமைதிகளினாலேயே நமது பண்டையோர் பல்வகைக் கிரமங்களை அறிந்துள்ளனர். மேலும், இசையமைதிப் பெயர்கள் சிலவற்றைக் கூறுகின்றேன், நன்கறிவீர்களாக. ஒரு கருவியின் முதல் நரம்பைத் தார நரம்பு எனக் கூறியது மிக மிகப் பழைய வழக்கேயாம். அட்டவணையில் முதற் கருவியின் குரல் நரம்பலகு மூன்றாங் கருவியில் முதல் நரம்பாகிய தாரம் பெற்றதால் இக் கருவியின் இசையமைப்பை குரல் தாரமாகக் கொண்டதெனக் கூறுவர். இது போன்றே இயற்கையான முதலமைப்பில் எழுந்த இசையலகுகள் பின்னர் எந்தக் கருவியிலேனும் எது வருகின்றதோ அதன் பெயரைக் கூறி அது தாரமெனக் கூறுவார்கள். இவைகளும் இடமுறையாகவும் வலமுறையாகவும் அறியப்படும். அவ்வமயம் குரல் தாரமாக எனக் கூறியது தாரங் குரலாக என வமையும். இருக்கட்டும் மாணவர்காள் சென்றுவாருங்கள். இசையைக் கணித வாயிலாகவும், ஓசை வழியாகவும் நீங்கள் நன்கு அறிந்து உணர முற்படுவீர்களாக.

சி :— ஐயா. அப்படியே.

# பன்னிரண்டு இசைத்தானங்கள்

| | ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ | ௯ | ௰ | ௰௧ | ௰௨ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | தாரம் | அந்தரம் | குரல் | அந்தரம் | துத்தம் | அந்தரம் | கைக்கிளை | உழை | அந்தரம் | இளி | அந்தரம் | விளரி |
| முதற்கருவி அலகுகள் | 0 | ௩ | ௪ | ௮ | ௭ | ௰௧ | ௰௨ | ௰௩ | ௰௬ | ௰௭ | ௨௰ | ௨௰௧ |
| | தாரம் | அந்தரம் | குரல் | அந்தரம் | துத்தம் | அந்தரம் | கைக்கிளை | உழை | அந்தரம் | இளி | அந்தரம் | விளரி |
| இரண்டாங்கருவி அலகுகள் | ௨ | ௫ | ௬ | ௯ | ௰ | ௰௩ | ௰௪ | ௰௫ | ௰௮ | ௰௯ | ௨௰௨ | ௨௰௩ |
| | தாரம் | அந்தரம் | குரல் | அந்தரம் | துத்தம் | அந்தரம் | கைக்கிளை | உழை | அந்தரம் | இளி | அந்தரம் | விளரி |
| மூன்றாங்கருவி அலகுகள் | ௪ | ௭ | ௮ | ௰௧ | ௰௨ | ௰௫ | ௰௬ | ௰௭ | ௨௰ | ௨௰௧ | ௨௰௪ | ௨௰௫ |
| | தாரம் | அந்தரம் | குரல் | அந்தரம் | துத்தம் | அந்தரம் | கைக்கிளை | உழை | அந்தரம் | இளி | அந்தரம் | விளரி |
| நான்காங்கருவி அலகுகள் | ௬ | ௯ | ௰ | ௰௩ | ௰௪ | ௰௭ | ௰௮ | ௰௯ | ௨௰௨ | ௨௰௩ | ௨௰௬ | ௨௰௭ |

உ

முருகன் துணை.

# "போற்றலின் - ஆற்றல்"

S. திருநாவுக்கரசு, B. A., L. T. கரந்தை.

போற்றல் - உரிய உயரிய புகழ்ச்சி - மானிடப் பிறவியின் குறைவுகள் - இறைவனின் தகைமைகள் குறையிரத்தல் - நிறைந்த இறையாற்றலுடன் தொடர்பு-போற்றலின் ஆற்றல்-உள்ளொளிப் பிழம்பு-நம் குறைவுளை அகற்றி திருத்த முயற்சி - இறையருளைப் பெறச்செய்யும் முயற்சித் தொடக்கம் - இம் முயற்சியுடையவர்கள் தோற்றம், பேச்சு, செயல் - போற்றியாற்றலின் வன்மை-அலெக்ஸிஸ் காரெல் சான்று-அப்பரடிகள் வாக்கு - தெளிந்த திண்ணியர் மனநிலை- உலகினர்க்குறும் இடர் தவிர்த்தல்-வீடும் வேண்டா விறலினர் - அருள் நிகழ்ச்சிகளின் இலக்கணம்-பயன் கருதாப்போற்றல் - முறையான ஒரு பயிற்சி - எமர்ஸன் சான்று - அருச்சனையே சிறந்த போற்றி - அருச்சனை பாட்டே யாகும் - பெரியபுராணச் சான்றுகள் - இசையும் பொருளும் ஒன்றிய பாடல்கள் - இறைவனைப் பாடும் பரிசு ஒன்றில்லை-சொல் நடைப்போற்றி - நீள நினைத்தல்-அதன் சிறப்பு - திருமுருகாற்றுப்படை, தேவாரச் சான்றுகள் - போற்றலும் இறைபணி நிற்றலும் - அரிதின் பயில வேண்டுவதொன்று - போற்றல் வழியே வாழ்க்கை வழி-வாழ்க்கை வழியே போற்றல்வழி-இறையருள் பெற்றூர் சிறப்பு-அது பெருதார் அவதி - இக்கால நிலை - இன்னல்கள் ஒழிய இறையறிவின் இன்றியமையாமை - இளைஞர் கடன் - இம்மையில் இறைநிலை-நற்காலம்-பொற்காலம்-திருக்குறள் சான்றுகள்.

'போற்றல்' என்ருல் ஈண்டு உரிய உயர் வழியில் புகழ்தல் என்பது பொருள். ஒருவரைப் பிறர் புகழ்ந்தால் அவரைப் போற்றுவதாகக் கூறுகின்ருேம். எல்லோரையும் புகழ்வதைப்

போற்றுதல் எனக் கூறினும் சிறப்பாக இறைவனை வாழ்த்துவது அல்லது போற்றுவதையே குறிக்கும். இக்கட்டுரையில் இறைவனைப் போற்றுவதைக் குறித்தே அச்சொல் வழங்கும்.

மக்களாகிய நாம் அவ்வப்போதும் பிறர் துணை நாடவேண்டிய நிலையில் இருக்கின்றோம். அப்போது துணை தேடுபவர், துணைவர விருப்போரைப் புகழ்தல் அல்லது போற்றுதல் இயல்பாம்.

மானிடராகிய நாம் அனைவரும், பிறப்பு, இறப்புத் துயர்களுக்குட்பட்டவர்கள். குறைந்த ஆற்றலும் குறுகிய ஆயுளும் உடையவர்கள். நமக்குச் சிற்றுயிர்கள் என்பதே சிறப்புப் பெயர். நம்முடைய அறிவும், ஆண்மையும் அளவானவையாம். அச்சம் அவா வெகுளி முதலிய குறைகள் நம்மிடம் குடிகொண்டுள. அவ்வப்போதும் மனம், மொழி, மெய்களில் ஒன்றற்கொன்று முரண்படும் இயல்பினர். நாம் நினைப்பதொன்றும் சொல்வது வேறொன்றும் செய்வது பிறிதொன்றுமாக இருக்கலாம். அன்றியும் தன்னலமே நாடுபவர்களாயிருக்கலாம்.

இத்துணை குறைகள் மலிந்த நம்போன்ற ஒருவரை நாடிக் குறையிரப்பதினும் எல்லாம் வல்ல இறைவனை நாடுதல் நனி நன்றன்றோ! நம்பியாரூரர்.

"தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ் சார்வினுந்தொண்டர் தருகிலார்.

பொய்ம்மையாளரைப் பாடாதே யெந்தை புகலூர்பாடுமின் புலவீர்காள்......"

என்னும் பாடலில் "பொய்மையாளரை வீணே போற்றிப் புகழ வேண்டாம். புகலூர் இறைவனைப் போற்றுங்கள்" என்று கூறுகின்றார். எனவே இறைவனைப் போற்றுதலே சாலச்சிறந்தது. இறைவன் உலகம் அனைத்தையும் உயிர்கள் யாவற்றையும் படைத்துக் காத்து மறைப்பவன்; எங்கும் நிறைந்தவன்; என்றும் உள்ளவன். பிறப்பு இறப்புத் துன்பங்கள் அவனுக்கில்லை; வேண்டுதல், வேணடாமை இல்லை. அளவிடற்கரிய அவனுடைய அருளும், ஆற்றலும் எங்கும் பரவி இருக்கின்றன. எல்லோரையும் எல்லா வற்றையும் ஒரு முகமாக நோக்குபவன் அவன். வேண்டுவார் வேண்டுவதே ஈவான். இன்னும், எல்லா உயிர்கட்கும் ஈன்றாளுமாய், தந்தையுமாய் உடன் தோன்றினராய்த் தோன்றாத் துணையாய் இருப்பவன்.

அவனுவார் பிறரின்றி அவனே யானவன்; அவன் இன்பமும் அன்பும் ஒருங்கே யானவன். இன்னும் பற்பல பெருந்தகைமைகள் நிறைந்து யாவற்றையும் அவ்வவற்றின் தகுதிக்கேற்ப இயக்க வல்ல இறைவனைப்போற்றி அவனருளைப்பெறுதல் எளிதன்றோ! அவனருள் வழங்குவன இம்மைக்கும் மறுமைக்கும் பயன் தரும் பெரும் பேறுகளே அன்றோ! "அதற்கியாதும் ஐயுறலில்லையே" என்பர் சுந்தரர்.

நம்மிடம் குடிகொண்டுள்ள எண்ணற்ற குறைவுகளை நிறைவுகளாக்கி நம்முடைய வாழ்க்கை வழியைச் செப்பஞ் செய்துகொள்ள நாம் இறைவனைப் போற்றல் வேண்டும். நம் பண்டை வினையின் பயனாக நம்மிடத்தில் குடிகொண்டுள்ள குற்றங்குறைகள் யாவும் தவிர அவனை நாடிப்போற்றல் வேண்டும். நமக்கு உற்ற துணையாக நிற்க அவனுடைய பேராற்றலை நாம் நாட வேண்டும். அவனுடைய மாறாத பெருந்தகைமைகளை நீள நினைந்து உளமும் உடலும் ஒன்றி அன்பு நெக்குருக மெய் சிலிர்க்க நம்மையே மறந்து அவனை வாழ்த்தல் வேண்டும்.

இவ்வாறு நாம் இறைவனை மனம் ஒன்றி வாழ்த்துங்கால், பாலில் நெய்போன்றும், விறகில் தீப்போன்றும், நிறைந்து பரந்து மறைந்துள்ள தனிப்பெரும் இறையாற்றலுடன் நமக்கு ஒரு தொடர்பு உண்டாகின்றது.

அத்தொடர்பு நம்மிடம் இயல்பாகவுள்ள இறையாற்றலை வலுவடையச் செய்கின்றது. அன்றியும் நம்மிடம் போற்றலின் ஆற்றல் என்னும் புத்தாற்றல் ஒன்றையும் தோற்றுவிக்கின்றது. நாம் இறைவனைப் போற்றும் போதெல்லாம் இப்புதுப் போற்ற லாற்றல் வளம்பெற்று உறுதியாக வளர்ந்து மேலோங்கி நம் மிடம் இயல்பா யமைந்துள்ள இறையறிவு இறையாற்றல் ஆகிய வற்றுடன் ஒன்றித்து இயங்கத் தொடங்குகின்றது. இவ்வியக் கத்தின் பயனாக நம் உள்ளத்தின் உள்ளே ஒரு செழுஞ்சுடர் தோன்றுகின்றது. நம்முடைய அன்றாடப் போற்றற் பயிற்சி யால் வலுவுறும் இறையறிவாலும் இறையாற்றலாலும் இப் பிழம்பு ஒருபேரொளியாகின்றது.

அப்பேரொளியில் நம் மனவிருள் அகல மானிட வாழ்க்கை யின் உள் உளவுகளை அகமே புறமாக நாம் அறிந்துகொள்ள இயலும். நம்மிடம் குடிகொண்டுள்ள யான் எனது என்னும் செருக்கும். அச்சம், சினம், காமம் அவா முதலிய குறைகளும் பிழம் பொளியில் மனவிருள் அகன்ற நிலையில் நமக்கு நன்கு புலனாகின்றன. அவற்றை உள்ளபடியறிந்து நாம் நாணுகின்

ரும். அவற்றை வெறுத்துக் களைந்தெறிய வேணவாக்கொள்ளு கின்றோம். நம்மை நாமே சீர்திருத்திக்கொள்ள முற்படுகின்றோம். பணிவான எளிய வாழ்க்கை நடத்தத் தலைப்படுகின்றோம். அன்றாடச் செயல்களையும் நம் வாழ்க்கையின் விளைவுகளையும் அவ்வப்போதும் ஆய்ந்து தணிக்கை செய்து நம்முடைய குற்றங்களை யகற்றவும் புத்தம் புதுக்குறைகள் நம்மை வந்தடையா வண்ணம் பார்த்துக்கொள்ளவும் உன்னிப்பாக விருக்கின்றோம். அந்நிலையில் தான் நாம் இறைவனுடைய பேரருளைப் பெறச் செய்யும் பெருமுயற்சி தொடங்குகின்றது.

இத்தகைய முயற்சியுடையவர்களுடைய மனமும், மெய்யும், மொழியும் சிறிது சிறிதாக மேன்மையடைந்து வரும். அவர்களுடைய முகப்பொலிவு, அறிவு வளம், நல்லொழுக்கத் திட்பம முதலியன நாளும் வளம்பட்டு வருதலை அவர்களுடைய வெளித்தோற்றத்திலிருந்தே யாவரும் காணலாம். இறைவனை நீள நினைத்து நித்தலும் இடைவிடாது போற்றுபவருடைய அன்றாட வாழ்க்கை சிறுகச் சிறுக மாறிச் சிறந்து மேன்மையுறும். அவர்களுடைய எண்ணம் சொல் செயல் யாவும் இறையொளியாலும் உள்ளுயுர் வன்மையாலும் பண்படுகின்றன. அவை ஒவ்வொன்றிலும் இறை மணமும், இறை யொளியும், நிறைந்து மிளிர்வதைக் காணலாம். அவர்களுடைய அடக்கம் நிறைந்த, பணிவான நடை, கலக்கமும் களங்கமுமற்ற முகப்பொலிவு தெளிவும், இனிமையும், அமைதியும் அருளும் ஒன்றிய கண்ணொளி, யாவர் மாட்டும், என்றும் மாறாத அருளுடைமை முதலிய இறைத் தன்மைகளால் அவர்களைப் பிறரினின்றும் பிரித்தறிய இயலும்.

இவ்வாறு அகத்தையும், புறத்தையும் ஒருங்கே பண்படுத்தி மக்களின் குறை வாழ்வைப் பெருவாழ்வாக மாற்றியமைக்கும் இப்போற்றலாற்றலின் வன்மை தான் என்னே! உலகியல் நிலன் நீர் தீ, வளி, வான், ஒலி, ஒளி மின் ஆகியவற்றின் பேராற்றல்கள் அனைத்திலும் வன்மை மிக்க தன்றோ இப் போற்றலாற்றல்! ஆதலால் மக்களாகிய நம்மிடம் அமையவேண்டிய ஆற்றல்கள் பலவற்றுள்ளும் தேடற்கெளியதும் பெறுதற்கரியதுமான இவ்வாற்றல் முதன்மையானதல்லா ?

"இடரினும் தளர்வினும் எனதுறு நோய் தொடரினும்"
"பேரிடர் பெருகியோர் பிணிவரினும்"

அவனைப் போற்றுவதையன்றி வேறொன்றும் செய்யேன் என்று கூறுகின்றார் ஞானசம்பந்தர்.

அலெக்ஸிஸ் காரெல் M. D, என்ற அமெரிக்க நாட்டு மருத்துவ நிபுணர் ஒருவர் இப்போற்றி யாற்றலைப் பற்றிக் கூறியிருப்பது, ஈண்டு நோக்கற் பாலது. "மற்றெல்லா மருத்துவ முயற்சிகளும் பயனற்ற வாகக் கண்டகாலை, சீரிய போற்றி முயற்சியின் வன்மையால் தீராத உடல் நோயினின்றும், உளத் தளர்வினின்றும், தேறிய மக்கள் பலரை ஒரு மருத்துவன் என்ற முறையில் நான் நன்கறிவேன்" என்று அவர் வலியுறுத்துகின்றார். இந் நாளில் அமெரிக்கருடைய நாட்டமெல்லாம் உலகியல் பொருள்துறையிலேயே! புதுவன புனைவதிலேயே! அவர்களிடம் இறை யறிவு தோன்றுதல் அரிதினும் அரிது. அந் நாட்டு நிபுணரே இவ்வாறு கூறி யிருப்பது பெரிதும் கோடற் குரியது. அந்நாட்டினர் அவ்வாறு உணர்வாராயின் தொன்றுதொட்டு இறையறிவும் இறை மணமும், அன்றாட வாழ்க்கை நியதிகள் அனைத்திலும் ஊடுருவிப் பாய்ந்து அவற்றைப் புனிதமாக்கி யமைத்திருக்கும் இந்நாட்டினர் எவ்வாறு அதனை உய்த்துணர வேண்டும்!

'தீராதவல் வினைநோய் தீர்க்கிற்பான் இறைவன்' என்பது அப்பரடிகளுடைய அருள் வாக்கு.

கூற்றுயினவாறு விலக்கியமையும், நீற்றறை ஐம்புலன்களுக்கும் இனிமை பயந்து குளிர்ந்தமையும் போற்றலின் வன்மையாலன்றோ!

இவ்வாறு இறைவனைப்போற்றும் பயிற்சியால் இறையருள் நிறைந்தவர்கள் இயல்பாகப் பிறர் அஞ்சி நடுங்கும் பிறவன்மைகளை மதிப்பாரல்லர். இறையாணைக்கன்றி அவர்கள் வேறெதனுக்கும் ஆட்படார்.

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந்தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவாரவர் செல்வம் மதிப்போமல்லோம்......"
"நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்..."

என்ற அப்பரடிகளுடைய வல்வாக்குகளும்,

---

As a Physician I have seen, men, after all other therapy had failed, lifted out of melancholy and disease by the serene effort of prayer — Alexis Carrel M. D.

"அமணர்கட் கெளியேனலேம் ஆலவாய்
அரனிற்கவே!"

என்ற ஞானசம்பந்தருடைய தேற்று மொழியும் தெளிந்து திண்மையடைந்த அவர்களுடைய மனநிலையைக் குறிப்பனவாம். இவ்வாறு கூற அவர்களுடைய நெஞ்சம் எத்துணை உரம் பெற்றிருக்கவேண்டும்! உலகியலில் பெருநிலை யடைந்தாருள் யாவர் இவ்வாறு கூற இயலும்? போற்றற்ப் பயிற்சியை மேற்கொண்டு பெருமுயற்சியால் நோற்று நோற்றுத் தம்மிடம் இறையாற்றலை வளர்த்தவர்கள் மட்டும இவ்விதத்திண்ணிய நிலையடையலாகும். அவர்கள் அன்ருடம் போற்றற்ப் பயிற்சியை நடத்தும்போது அவர்கள் மனத்தின் கண் பற்பல வியப்புறு நிகழ்ச்சிகள் நிகழ்ந்து நிலைக்கின்றன. அந்நிகழ்ச்சிகளின் பயனாக "அஞ்சுவதும் இல்லை அஞ்ச வருவது மில்லை" என்ற அஞ்சா நிலை உண்டாகின்றது, அவர்கள் திண்ணியராகின்றனர்.

இவ்வாறு இறைவனைப் பொழுதறு காலத்தென்றும் போற்றிப் போற்றி அவனுடைய பேரருள் பாலிக்கப்பெற்று அதனால் திண்ணியரானவர் தம்மிடம் பெருகி நிலைத்துள்ள போற்ற லாற்றலாலும் இறைவன் திருவருளாலும், உலகினர்க் குறும இடுக்கண்களும் துயரும் அகல அவனருளைப்போற்றி, அதனையே முன்னிட்டு இறைவன்மையால் அருள் புரியும் வகையும் பலப்பல. பாண்டியன் சுரந்தீர்த்தமை - என்பு பெண்ணுருவாக்கண்டமை, அப்பூதியடிகள், மகன் அரவுவிடந்தீர்த்தமை வீழியில் வற்கடம் அகற்றினமை, முதலையுண்ட பாலனை அழைத்தமை முதலியன யாவும், இறைவன் அருள் பெற்ற திண்ணியர் "எண்ணிய எண்ணியாங் கெய்துப" என்னும் வள்ளுவர் வாக்கை வலியுறுத்துவனவாம்.

கட்புலனாற் கண்டது, செவிப் புலனாற் கேட்டது, இவையன்றி வேறெதனையும் கொள்ள மறுத்து, அனைத்தினும் ஆய்வு என்ற பெயரால் முறையற்ற அறிவைப் புகுத்தித் தம்மையும் பிறரையும் அல்வழியிற் பயிற்றுவார்க்கு இவற்றின் நுட்பங்கள் புலனாகாமை வியப்பன்று!

இவ்வருள் நிகழ்ச்சிகளை நிகழ்த்தியவர்கள், அவற்ருற் பெரும் புகழ் எய்துவான் கருதி நிகழ்ததியவர்கள் அல்லர். அவனருளைப் போற்றுவது ஒன்றையே தம நாட்கடனாகக் கொண்டவர்கள் தம்முடைய சீரிய வாழ்க்கைவழி பிறர்க்கு உறூஉம் வெங்குறைகளைக்கண்டு தாமே தளர்ந்து இறைவன் திருவருளை முன்னிட்டு அதனையே போற்றி அவனருளாலே தீர்க்க நிகழ்த்தினவாம்

அவை. அன்றியும் அவ்வருளாளர் குறைகள் நேருமிடம் எங்கணும் சென்று, சென்று அவற்றைத் தீர்த்தலையே தம் ஒரு தொழிலாகக் கொண்டவருமன்று. அத்தகைய வியப்புறு நிகழ்வுகளை நிகழ்த்துவான் வேண்டி இறைவனைப் புகழ்ந்தவருமல்லர். தாம் மேற்கொண்ட போற்றிப் பயிற்சியின் சார்புடைப்பயனாகத் திருவருளின் துணைவலியால் நிகழ்ந்தனவேயாம் அவை யாவும். இன்னும் உலகியலில் மாய வித்தைகள் செய்வான் செய்யும் ஆயத்தங்களில் ஒரு சிறிதுகூட, அவர்கள் அருள் நிகழ்வுகளைச் செய்யச் செய்தாரல்லர். இயல்பாக, அன்றாடக் கடனேயாக, இறைவனைப் போற்றுதல் ஒன்றே அவர்கள் செய்தது. அவனருள் நினைவு ஒன்று ஒன்றியே அவர்கள் போற்றினர்கள். எப்பயனும் பெற நினைந்து போற்றினர் அல்லர். அவர்கள் **கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டாவிறலினர்.**

எனவே, யாதாமொன்றை விரும்பியோ வேண்டியோ, நினைத்தோ இறைவனைப்போற்றுவதினும் அவன் நினைவேயாகி அவன் அருளையே நினைத்து கசிந்து கண்ணீர் மல்கி அவனைப் போற்றுவதையே இறைவன் ஏற்பான். ஆதலின் சிறுவர் முதல் நடைவலியற்ற மூப்பினர் ஈறாக ஆண் பெண் இரு பாலாரும் அன்றாடம் செய்து தீர வேண்டிய கடமைகளுள் ஒன்றாக, அவர்களுடைய அன்றாட வாழ்வில் அமையவேண்டும் ஒழுங்குகளுள் ஒன்றாகப் போற்றற் பயிற்சியும் அமைதல் இன்றியமையாததாம். அரிதின் முயன்று நாணாளும் முறையாக நடத்த வேண்டுவதொன்றாதலின், உடற்பயிற்சி, இசைப்பயிற்சி இலக்கியப்பயிற்சி முதலிய பல்கலைப் பயிற்சிகள் போன்று இதனையும் **போற்றற் பயிற்சி** எனலாயிற்று. இது அன்றாடம் இறைவன் திருமுன் நடைபெறும் ஒரு தூய, விழுமிய, சீரிய பயிற்சியாக அமைதல் கட்டாயமாம். இவ்வாறு இறைவனை இடை விடாது போற்றுவதையே தம் வாணாட் கடனாகக்கொண்டு பிறழாது ஒழுகும் அன்பர்களைத் தாங்குதல் அவன் கடனேயாகும். இது பற்றியே "*தன் கடன் அடியேனையும் தாங்குதல்*" என்பர் சம்பந்தர்.

இன்னும்

> "கல்லினோடெனைப் பூட்டிய மண்கையர்
> ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
> நெல்லு நீர் வயனீலக் குடியான்
> நல்ல நாமம் நவிற்றியுய்ந்தேன்."

என்னும் அப்பரடிகளுடைய வாக்கைவிட வேறென்ன சான்று வேண்டும் தன்னைப் போற்றுவாரை இறைவன் தாங்குவான் என்பதற்கு?

மேனுட்டு அறிஞரான * எமர்ஸன் என்பார் போற்றலின் பயனைக் குறிப்பிடும் வாயிலாக "* கடவுளைப் போற்றும் போதெல்லாம் ஒவ்வொருவரும் ஒவ்வொன்றை அறிந்து கொள்ளாமல் இருந்ததில்லை" என்று கூறுகின்றார். ஆதலால் இறைவனைப் போற்றுவார்க்குப் பேறுகள் பலவும் வந்தெய்தும். **வானவரும் தாம் வாழ்வான் இறைவனை வாழ்த்துகின்றனர்.**

இறைவனுக்கு மிக்க உவப்பான "போற்றல்" அருச்சனை. அவ்வருச்சனை பாட்டேயாகும். இதனை "நமக்கு மன்பின்மிக்க வற்சனை பாட்டேயாகும்." என்று இறைவனே நாவலூரர்க்கு உணர்த்தியதினின்று அறியலாம். ஈசன் அன்பர் பாடலுக்கு உவப்பான்; அதற்கு எளிவருவான்; இனிய பாடலை முற்றும் கேட்க விரும்பி அன்பர்கள் வேண்டிப் பாடுவதை முடிப்பதைத் தாழ்க்கவும் வைப்பான் என்பன, அப்பருடைய "பாட்டுப்பயன் றுப்பான் றெண்ணீர ணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்க...' என்று திருமறைக்காட்டு மறைக்கதவந்திறந்த நிகழ்ச்சியைக் கூறும் சேக்கிழார் பெருமான் திருவாக்கால் புலனாகும். பாட்டு என்றதனாலேயே இசையோடு கூடியது என்பது பெறப்படும். இசையும் பொருளும் ஒன்றிய பாடலின் பெருமையை அறியாதார் உளரோ? அவை இரண்டும் பொருந்திய விடத்து மனமும் மெய்யும் ஒரு வழிப்படுகின்றன. புலன்கள் பொறிகலங்கி நிற்க மாட்டா! இன்னிசை யோசையில் எல்லோரும் தத்தம் மெய் மறந்து செயல் மறந்து நிற்பர். புள்ளும் மாவும் கூட இசை வலைப்படும் என்பர் கவிஞர். ஐம்புலன்களின் வழியே செல்லும் பொறிகளையும் பல வழியிலும் சிதறுண்டு திரியும் மன அலைகளையும் ஒருவழிப்படுத்த இசை வன்மையால் ஆகும். இறைவனே "ஏழிசையாய் இசைப்பயனாய்" இருப்பவன் என்பார் சுந்தரர். ஆதலால் இறைவனைப்போற்ற இன்னோசையும் பொருட் செறிவும் நிறைந்த பாடல்கள் சாலச் சிறந்தன; அவை ஆற்றல் மிக்கவை.

இனி இறைவனைப் போற்ற, ஒரு முறை, வகை, நேரம், இடம் என்பதிலலை! தம்பிரான் தோழராக விளங்கிய ஆளுடைய நம்பியே 'பரவும் பரிசொன் றறியேன் நான்' என்பார். மணிவாசகர் 'ஏது அவனைப் பாடும் பரிசு' என்பார். 'என் பெயர் பித்தன் என்றே பாடுவாய்' என்று இறைவனே சுந்தரர்க்கு உணர்த்தினன். ஆதலால் பித்தனே என்ருயினும், பேயனே

---

* Emerson.

* No man ever prayed without learning something

யென்றாயினும் அத்தனே என்றாயினும் பாடினால் பாடுவார் பக்கல் நிற்பன் ஈசன். அவர்களை நிலை நிறுத்துவான். இக் கருத்து ஆளுடைய அரசுகள் 'நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே - நீவா' - என்று கூறியழைத்து 'சங்கரா செய போற்றி போற்றி என்றும் அலைபுனல் சேர் செஞ்சடை யெம் ஆதியென் றும், ஆரூரா என்றென்றே அலறா நில்லே' என்று கூறுவதி னின்றும் வெளிப்படை. நிலைபெற வேண்டுபவர் இறைவனைப் போற்றி அவன் முன் நின்று அலறவேண்டும் என்பது அப்பர் தம் நெஞ்சத்துக்கு வலியுறுத்திய கட்டளை. அவர் நிலையில் அவர் கட்டளை அதுவானால் நம் நிலையில் நாம் யாது செயல் வேண்டு மெனபது கூறாமலே புலனாகும். நாயன்மார்களும், ஆழ்வார் களும் இறைவனைப்புகழ்ந்து பாடிய பாடல்கள் யாவும் இறை யருட் பாடல்களாம். அவைபோன்ற பாடல்களை இந்நாளில் அமைத்தல் ஒரு சிறிதும் இயலுவதொன்றன்று என்பது எக் கருத்தைக் கொண்டாயினும அவற்றைப் படிப்பார்க்கு நன்கு விளங்கும்.

ஆதலின் அத்தகைய சிறந்த பாடல்களைப் படித்துப் பொரு ளறிந்து இசையுடன் பாடி இறைவனைப் பாடுதல் ஒருவழி.

பாட வியலாதவர், சொற்களாலேயே இறைவனுடைய அருள் வன்மையைப் போற்றலாம்.

இவை யாவற்றினும் மிக எளியதும் சாலச் சிறந்ததுமான போற்றுதல் இறைவனை இடைவிடாது நினைத்தலேயாம்.

"ஒன்றியிருந்து நினைமின்காள் உந்தமக்கு ஊனமில்லை" என்று அப்பரடிகள் கூறுகின்றார்.

"நின்னடி உள்ளிவந்தனன்" என்று நக்கீரர் திருவடி உன் னுஞ் சிறப்பு கூறுகின்றார். இறைவன் "நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவன்" "மனத்தகத்தான்" "மனத்தானை" என்னும் அருள்வாக்குக்களும், "சிந்தித்தென்றுநினைத் தெழு வார்கள் சிந்தையிற்றிகழுஞ் சிவன்"என்ற சுந்தரர் பாடலும் மன நினைவால் இறைவனைப் போற்றும் சிறப்பைக் குறிப்பிடு கின்றன.

அருணகிரியார் "எங்கே நினைப்பினும் அங்கே என் முன் வந்தெதிர் நிற்பனே', என இளமுருகன் அருட்டிறத்தைக் கூறு கின்றார்.

இவ்வாறெல்லாம் போற்றுவதால் நம்மிடம் இறைவன் அருள்பாலிக்கும் என்பது முற்கூறிய வாற்றாற் பெறப்படும்.

ஆயினும் நாள்தோறும் ஒரு சில நேரம் இறைவனை எவ்வகையிலோ போற்றி விட்டு ஒழிந்த நேரமெல்லாம் இறை வழிக்கு மாறாக ஒழுகுபவர்க்கு அவருடைய போற்றும் முயற்சி யாது பயனளிக்கும்? அவர்களிடம் ஓராற்றலும் தோன்றாது. அவர்கள் போற்றற் பயிற்சிக்கே ஓர் இழிவையும் இழுக்கையும் தேடுபவராவார்கள். தாம் போற்றுவதால் முழுப்பயனையும் பெற விரும்புபவர்கள் அவனைப் போற்றுவதுடன் அவன் அருள் வழி நடத்தலும் வேண்டும்.

"சேவடி படருஞ் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவு நீ நயந்தனையாயின்"—என நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் "அவன் திருவடி நினைவுடன் அவன் அருள் வழி நடக்கும் விருப்பும் நீ விரும்பினால்" எனத்திட்டம் வகுத்தார்.

இறைவனைப்போற்றும் பயிற்சியும் இறைவழி நிற்றலும் நம்மிடை எளிதின் அமைவனவன்று. பன்னாள் அரிதின் முயன்று, முயன்று விழிப்புடன் பழகி வரவேண்டிய பயிற்சிகளுள் முதன்மையானவையாம். போற்றலாகிய விழுமிய பயிற்சி வாழ்க்கையில் பரவிக் கலந்து படிந்து போற்றல் வழியே வாழ்க்கை வழியாக, வாழ்க்கை வழியே போற்றல் வழியாக இரண்டும் ஒன்றாய் ஒன்றனுள் இரண்டாய் இரண்டினுள் ஒன்றாய் இலயித்து வாழ்தலே போற்றல் முயற்சியாலும் போற்றலின் ஆற்றலாலும் உள்ளுயிர் சிறப்படைந்தார் பெறும் பேறுகளாம். அத்தகைய இறைவழி வாழ்க்கையானது நினைத்தூதுமளிக்கும் பிறவாமல் நிசிக் கருவறுக்கும்; பிறவிப் பெருங்கடலை நீந்தும் வழியுமாகும்.

அவ்வாறு இறையருளைத் தேடிக்கொள்ளாதவர் யாதாவார் என்பது "பிறந்த வாறேதோவென்னில், பெருநோய்கள் மிக நலியப் பெயர்த்துஞ் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே" என்னும் நாவுக்கரசர் வாக்கால் புலனாகும்.

இகத்தில் இறையறிவுடன் அவனைப்போற்றி இறை வாழ்க்கை வாழ்பவரை, பசி, பிணி, வறுமை முதலிய இடர்கள் அணுகா.

இந்நாளில் நம்மிடையே வறுமையும் பசியும், பிணியும், போராட்டங்களும நிறைந்திருப்பதே நம்மிடம் இறையறிவும், போற்றல் முயற்சியும் குன்றியிருப்பதற்குப் போதிய சான்றுகளாம்,

# திருக்குறள்

## பொன்னுரைப் பகுதிகள்.

உரைகாரர்: கொக்குவில் திரு. வ. பொன்னையா, B. A. (Hons.), Phd.

(முற்றொடர்ச்சி: துணர் உரு, மலர் ௰, பக்கம் 320.)

### வாய்மை.

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்

இ-ள் புறந்தூய்மை நீரான் அமையும்—ஒருவனுக்கு உடம்பு தூய்தாதல் நீரானே முடிவடையும், அகந் தூய்மை வாய்மையான் காணப்படும்—அதுபோலத் தவஞ் செய்வானுக்கு மனந்தூய்தாதல் வாய்மையான் முடிவடையும்; ஆகையால் தவஞ்செய்வானுவான் வாய்மை கடைப்பிடிக்க எ-று

---

இவ்வித இன்னல்கள் யாவும் மாறி மறைய வேண்டுமானல், நாம் ஓரின உணர்வுடன், நேயப் பான்மையுடன், கலகமும் கலக்கமும் இன்றி, இடரும் தளர்வும் நீங்கி வாழ வேண்மானல், நாம் பிறப்பதற்கே தொழிலாகி இறக்காதிருக்க வேண்டுமானல் நாம் நம்மிடம் மங்கி மறைந்துகொண்டுபோகும் இறையறிவையும் இறையாற்றலையும் வலுவுறுத்த வேண்டும்.

இளைஞர்கள் இப்பயிற்சியில் தம் பிள்ளைப் பருவமுதலே பழகவேண்டும். பிற கருத்துக்கள் தோன்றி இளைஞர் மனத்தை வறும் பாழாக்க மும்முரமான முயற்சிகள் பரவும இந்நாளில் பெற்றோர்கள் ஆவனசெய்து தத்தம் பிள்ளைகளை இம் முயற்சியில் ஈடுபடுத்தி அவர்களுடைய இம்மை மறுமைக்குப் பயனளிக்கும்போற்றல் முயற்சியிலும் இறைவாழ்க்கையிலும் ஈடுபடச் செய்யவேண்டும். இவ்வாறு அவர்கள் வாழ்த் தலைப்படும் காலமே நற்காலம். அதுவே பொற் காலம். அந்நாளில் ஒருவர் பெற்ற இன்பம் இவ்வையகமே பெற்றதாகும். எந்நாளும் இன்பமே யொழியத் துன்பமில்லை என்ற நிலை வந்தடையும். அந்நிலை நோக்கிய யாவரும் முயற்சித்தல் வேண்டும். முயன்று இம்மையிலேயே இறை நிலையடையவேண்டும்.

வையத்து வாழ்வாங்கு வாழ்பவரை
வானுறையும் தெய்வத்துள் வைக்கப் பெறும்
மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார். (குறள்)

புறந்தூய்மை, அகந்தூய்மை என்பன ஒருசொன்னீர்மைப்பட நின்ற தொகையல் தொடர்மொழிகள். மூன்றனுருபு இரண்டிடத்துங் கருவிப்பொருட்டு. அமைதல், காணப்படுதல் என்பன முடிவடைதல் என்னும் பொருளில் நின்றன. உவமை தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. மண், வளி முதலாயினவும் ஒருவனது உடம்பைத் தூய்தாக்குமாயினும், நீரின்றி உடம்பானது தூய்தாதல் முடிவடையாதென்பதுபற்றி நீருக்குத்தலைமை இருப்பதுபோலக், கூடா வொழுக்கந்தவிர்தல் முதலாயினவுந் தவஞ் செய்வானது மனத்தைத் தூய்தாக்குமாயினும், வாய்மையின்றி அவன் மனந் தூய்தாதல் முடிவடையா தென்பதுபற்றி வாய்மைக்குத் தலைமை யாயிற் றென்க.

“தவஞ்செய்வார்க்கு மூவகை வாய்மைகளுஞ் சாத்தியஞ் தலைப்படுதற் பொருட்டு எத்துணை உபகரித்து நிற்கு மென்பதை நீர் கூறியவாற்ருன் அறிந்தேன். இனி, அவை அவர் தவத்தை எவ்வாறு முடிவுபோக்கு மென்பதையும் அறிய விழைகின்றேன்,’ என்ருற்கு உத்தரமாக வாய்மையானது தவஞ் செய்வானுக்கு மனந்தூய்தாதலடைதலை முடிவுறச் செய்து ஶ்ரேயத்தைக் காட்சிப் படுத்தும்’ என்று இக்குறளாற் கூறுகின்ருர்.

உலகத்து வாழும் மக்களானவர் மண்ணிடைக் கிடப்பதாலும், வெயிலிடை நிற்பதாலும், வளியிடைச் செல்வதாலும் தம் உடம்பின் வாலாமை சிறிது நீங்கப் பெறுவராயினும், நாடோறும் நீரிடை மூழ்குதலானன்றி வாலாமை நீங்குதல் முற்றிநில்லார். அதுபோல, தவஞ் செய்வாராவார் கூடாவொழுக்கந் தவிர்தல் முதலாயின கடைப்பிடித்துத் தாம் மனஞ்சிறிது தூய்தாதல் பெறுவராயினும் வாய்மையின்றி மனந்தூய்ந்தன்மை முற்றிலாரென்று கூறியவாருயிற்று.

இக்குறளுக்குப் பரிமேலழகர் 'ஒருவனுக்கு உடம்பு தூய்தாந் தன்மை நீரானே யுண்டாம். அதுபோல மனம் தூய்தாந்தன்மை வாய்மையா னுண்டாம்' என்னும் உரையையும் 'காணப்படுவதுள்ளதாகலின், உண்டாமென்றுரைக்கப் பட்டது. உடம்பு தூய்தாதல் வாலாமை நீங்குதல், மனந்தூய்தாதல் மெய்யுணர்தல். புறந்தூய்மைக்கு நீரல்லது காரணமில்லாதாற்போல, அகந் தூய்மைக்கு வாய்மை யல்லது காரணமில்லை யென்றவாறாயிற்று. இதனானே துறந்தார்க்கு இரண்டு தூய்மையும் வேண்டுமென்பதூஉம் பெற்றாம், என்னும் உரை விளக்கத்தையுந் தந்தார்.

ஈண்டு, புறந்தூய்மைக்கு நீரல்லது காரணமில்லாதாற் போல, அகம் தூய்மைக்கு வாய்மையல்லது காரணமில்லை என்று கூறுதற்கண் புறந்தூய்மைக்கு வளிமுதலாயின வும், அகந்தூய்மைக்குக் கூடாவொழுக்கந் தவிர்தல் முதலாயினவுங் காரணமாகுமென்பதை மறந்தார் என்பதனானும், இனி இதனானே துறந்தார்க்கு இரண்டு தூய்மையும் வேண்டுமென்பதூஉம் பெற்றாம்' என்று கூறுதற்கண், கண்டது கொண்டு காணாததை அறிவிக்கும் எடுத்துக் காட்டுவமையின் இயல்பை நோக்கினாரல்லர் என்பதனானும், அழகியார் உரை வழீஇனாரென்க.

இப்பாட்டு என்னுதலிற்றோ வெனின், தவஞ்செய் வானாவான் மனந்தூய்தாதல் பெற்றே ஞேயங் காட்சிப் படுவனாகையான், அன்னான் அது காட்சிப்படுதல் விழைவின் மனந்தூய்தாதல் முற்றுப்பெற வாய்மை கடைப் பிடிக்க. எ-து.

**எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு**

இ-ள். சான்ருேர்க்கு எல்லா விளக்கும் விளக் கல்ல—தவத்தின் அமைந்தோர்க்குக் கூடாவொழுக்கந் தவிர்தல், கள்ளாமை முதலிய வியஞ்சகமெல்லாம் வியஞ் சகமாகா. பொய்யா விளக்கே விளக்கு—அவர்க்குப் பொய்யாமையாகிய வியஞ்சகமே வியஞ்சகமாகும். ஆக லான் அன்னுர் பொய்யாமை கடைப்பிடிக்க. எ-று

உம்மை முற்றும்மை. விளக்கல்ல என்பதும் விளக்கு என்பதும் முறையே சிறப்புடைய விளக்கல்ல, சிறப் புடை விளக்காகும் என்னும் பொருள்கள் தோன்ற நின்றன. பொய்யாத வென்னும் பெயரெச்சத் ததிர் மறை கடைக்குறைந்து பொய்யாவென நின்றது. ஈண்டு அஃது நின்முகங்காணு மருந்தினேன் என்புழிப் போல வினைப்பெயர் கொண்டு முடிந்தது. ஏகாரம் பிரிநிலை, வியஞ்சகம் என்றது மனத்துக்கண் மாசை நீக்கி ஆன் மப் பிரகாசத்தைச் செய்வதை.

'முன்னர்ப் பொய்யாமை யென்னும் வாய்மை துணைகொண்டு தவஞ்செய்வாருவான் பிறவறஞ்செய் யாமை நன்றென்றீர். பின்னர் வாய்மையானது பிற வறஞ்செய்து மனஞ்சிறிது தூய்தாதால் பெற்று நின்று தவஞ்செய்வானுக்கு ஞேயத்தைக் மாட்சிப்படுத்து மென்றீர். ஆயின், பொய்யாமை யென்னும் வாய் மையே கடைப்பிடித்துத் தவஞ்செய்வாருவான் நீர் சொல்லியவாறு பிறவறஞ்செய்யாது நின்ருருயின், அவன் மனஞ்சிறிது தூய்தாதல் பெற்றிலன் என்பதுபற்றி, அவ்வாய்மையானது அவனது மனத்தைத் தூய்தாதல் முற்றச் செய்தற்கும் அதன்வழி ஞேயங் காட்சிப் படுதற்கும் ஏதுவாகாதே' என்ருற்கு, 'அற்றன்று பொய் யாமை கடைப்பிடித்துத் தவஞ்செய்தல் முன்னைப் பிறப்புக்களிற் செய்த வறங்கள் காரணமாக மனஞ் சிறிது தூய்தாதல் பெற்ருர் மாட்டன்றிப் பயன்றரா

தாகையான், அங்ஙனம் அது சிறிது தூய்தாதல் அடைந் தார்க்குப் பொய்யாமையானது அத்தூய்தாந்தன்மையை முற்றுவிக்கு மென்பாராய்த் ‘தவத்தினமைந் தோர்க்குக் கூடாவொழுக்கந்தவிர்தல், கள்ளாமை, பிறவகை வாய்மை கள் என்னும் இவற்றான் உளதாகும் ஆன்மப் பிர காசத்தினுங்குப் பொய்யாமையான் வரும் ஆன்மப் பிரகாசமே சிறந்தது’ என்று இக்குறளான் விடை யிறுக்கின்றார்.

துறவை மேற்கொண்டு நின்று தவஞ்செய்து அத் தவத்தின்கண் அமைந்தாராவார் முன்னைப் பிறப்புக் களிற் றாம் செய்த அறங்கள் காரணமாக மனம் ஒரு வாற்றான் தூய்தாந்தன்மை பெற்றாராகையால், அவர்க்கு மனமாசு நீக்கம் முற்றுப்பெறுதற்கும், அந் நீக்கத்தே நிகழும் ஆன்மப் பிரகாசம் உண்டாதற்கும் கூடா வொழுக்கந்தவிர்தல், கள்ளாமை பிறவகைவாய்மைகள் என்னும் வியஞ்சகங்களானவை அவர்மனத்தை விருத் திப்படுத்துமாதலான் சிறிதே துணைசெய்யு மாகையான், அவற்றான் உண்டாம் ஆன்மப் பிரகாசம் சிறப் புடைப் பிரகாசமாகா வென்றும், அன்றிப் பொய்யாமை என்னும் வாய்மையாகிய வியஞ்சகமானது அகமுக நோக்கிற்றாதல்பற்றிப் பெரிதுந் துணை செய்யுமாகையான் அதனான் வரும் ஆன்மப் பிரகாசத்தையே சிறப்பு டைப் பிரகாசமென்றுங்கூறுவாராய்க், கூடாவொழுக்கந் தவிர்தல், கள்ளாமை முதலியனவற்றைச் சிறப்பில் வியஞ் சகங்களெனக் கொண்டு பொய்யாமையாகிய வியஞ்ச கத்தையே சிறப்புடை வியஞ்சகமென்று உயர்த்திக் கூறனாராயிற்று.

இக்குறளுக்குப் பரிமேலழகர் ‘புறத்திருள்கடியும் உலகத்தார் விளக்குகளெல்லாம் விளக்காகா; துறவான மைந்தோர்க்கு விளக்காவது மனத்திருள் கடியும் பொய்

யாமையாகிய விளக்கே' என்னும் உரையையும் 'உலகத்தார் விளக்காவன ஞயிறு, திங்கள், தீயென்பன. இவற்றிற்குப் போகாத விருள்போகலின், பொய்யா விளக்கே விளக்கென்றார். அவ்விருளாவது அறியாமை. பொய்யாத விளக் கென்றது குறைந்து நின்றது. பொய் கூருமையாகிய விளக்கென்றவாறு ...... என்னும் உரை விளக்கத்தையுந் தந்தார்.

ஈண்டு 'எல்லா விளக்கும் விளக்கல்ல' என்பதற்கு உரை கூறுதற்கண் முன்னர்ப்பாக்களுக்கும் இப்பாவிற்குமுள்ள இயைபை நோக்கிறைரல்ல ரென்க.

இப்பாட்டு என்னுதலிற்றோ வெனின், தவத்தினமைந்தோர்க்குப் பொய்யாமை யென்னும் வாய்மையாகிய வியஞ்சகமானது ஏனைய வியஞ்சகங்களினுங்கு மனத்துக்கண் மாசைப் பெரிதும் நீக்கி ஆன்மப் பிரகாசத்தை விளைவிக்கு மாகாலான், அன்னர் பொய்யாமை கடைப்பிடிக்க எ-து

(தொடரும்)



(366 ஆம் பக்கத் தொடர்ச்சி.)

பத்தொடு சார்ந்த பதிகமா யிலங்கினமையானும், ஆரிய ரென்ற சொல்லாட்சி யமையப் பெற்றமையானும் எடுத்துக் காட்டப்பெற்றது. மேலும், 'ஆரியரலறத் தாக்கி' என்ற வகப்பாட்டடியானும் ஆரிய ரென்ற சொல்லாட்சி யறியப்படும். அகச்சான் ருென்றமையி னதுவே சாலச் சிறந்ததென ஆன்ருே ரறைவர். புறச்சான்று பல புகலாமைக்குக் காரணம் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் நோக்கம் பற்றியே யாம்.

இனி, 'நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்' என்ற தொடருக்குக் 'கட்கொண்டிக் குடிப் பாக்கத்து' என்ற மதுரைக் காஞ்சி யடியைக் காட்டி அதற்கு இழிந்த குடி யென வுரை வகுத்தனர் நச்சிஞர்க்கினியர் என்றுரைத்திருப்பதும் தவறு; நச்சர் அவ்வாறு கொள்ளினும் தவறுடையதே என்று என்னுல் எழுதப்பட்ட தொடர் மொழிகளில் 'அதற்கு' என்று யான் எழுதிய சுட்டுச் சொற்கு விளக்க மில்லை யெனச் சுட்டிய லறியாக் கட்டுரையாளர் வரைகின்ருர். நச்சிஞர்க்கினியர் உரையாகிய இழிந்த குடி என்ற விடத்திலும், 'கட்கொண்டிக் குடி' என்ற செய்யுளடியிலும், குடி என்ற சொல் வந்துளது. ஆகவே, இழிந்த குடி என்ற வுரை 'பாக்கம்' என்ற சொற்கில்லை. 'கட்கொண்டிக்குடி' என்ற வளவில் தானுண்டென்பது வெள்ளிடை விலங்கலெனத் தோன்றுகின்றது. மேலும், இழிந்த குடி யென நச்சிஞர்க்கினியர் நவின்றது கள்ளாகிய உணவினையுடைய என்னும் பொருள்படும் 'கட்கொண்டி' என்ற சொற்களைக் குடிக் கடையாகக் கூறியதனுல் என்பதும் விளங்கித்தோன்றுகின்றது. இங்ஙன மிருக்கப் பரிவுரையாளர் பிழை கண்டு விட்டதுபோல் வீண் வாதஞ் செய்து நிற்கும் பயனிலாத் தன்மையை யறிஞருணர்வாராக. கனி மரத்தில் காய் தேடி அலுத்தவன்,

காணுமையால், கனியையே காய் என எண்ணிக் கொள் வதைப் போல, வழுக்களில்லாத தொடர்களில் வழுவைத் தேடிக் காணுமையால், முடிவில் நல்ல தொடரையும் அல்ல தெனக் கூறி அயலார் நகைப்பிற் காளாகி நிற்கும் அன்பர் நிலை கண்டு இரங்குகின்றேன். மேற் கூறியது கொண்டு பரிவுரையாளர் கண்டதாகக் கூறும் பல தவறுகளின் பண்புகள் பகராமலே விளங்குவனவாம்.

பாக்கம் என்பது சிற்றூராயினுமாக, பேரூராயினுமாக. 'கட்கொண்டிக் குடிப் பாக்கத்து' என்ற விடத்து, கள்ளை உணவாக வுடைமையின் இழிந்த குடியென நச்சினார்க்கினியர் உரை வகுத்திருப்பது பொருந்தாது. அப் பொருந்தா வுரைகொண்டு பதிப்பாசிரியர் 'நீரழி பாக்கம்' என்பதற்கு நீர்மை யழிந்த ஊர் எனச் சிற்றூரவரையோ பேரூரவரையோ கூறுவது பொருந்தாது. சங்க காலத்து அறிஞர்களும் அரசர்களும் பிறரும் கள்ளும் ஊனும் உண்டனராகப் பல பாடல்களிற் காணலாம். ஆதலின் கள்ளாகிய உணவுடைமையின் இழிந்த குடி யென இழி வுரைத்தல் தகா தென்பதே என் கருத்தாகும். இக் கருத்தினைப் பிரித் தறியும் பொறுமை யிழந்த பரிவுரையாளர், சிற்றூர், பேரூர் என்ற கருத்தைப் பிரித்தறிய வியலாது இடர்ப்பாடுறுவதாகக் கூறுவது அவருடைய இயலாமையின் அகலத்தைப் புலப்படுத்துகின்றது.

மேலும், பழைய வுரைகாரர் 'கட்கொண்டிக் குடிப் பாக்கத்து நற்கொற்கை' என்ற மதுரைக்காஞ்சி யடிகளை மேற்கோள் காட்டினும், பாக்க மென்றது நெய்த னிலத் தூர்க்கே யன்றி ஒரோவழி அரசனிருப்புக்கும் பெயராமாகலின் 'ஈண்டு பாக்கமுடைய பேரூர்களெனப்பட்டது' எனக் கூறி யொழிந்தாரன்றி இழிபினை இசைத்தாரில்லை. ஆயின் பதிப்பாசிரியர் பாக்கம் என்றதற்குச் சீறூர் என்ற நச்சினார்க்கினிய ருரையை நவின்றிருக்கலாம். வழிப் படுத்திய நிலையை உளங்கொளாத பதிப்பாசிரியர், இழிந்த

குடி என்பதனை யுணர்த்துவான் வேண்டி, கள்ளாகிய உணவினையுடைய இழிந்த குடியினையுடைய சீறூர் என நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டுள் மதுரைக் காஞ்சிப் பாட்டில் காட்டியதனைத் தாமும் பதிற்றுப் பத்துள் எடுத்துக்காட்டி நிலை நாட்டினார். இங்ஙனம் இழிந்த குடி யென இருவரு மிசைத்து வசை கூறுவது ஏலா தென்பதே என் கருத்தாகும்.

இனி, 'உள்ள மழிய' என்ற விடத்து அழிய எனும் சொல்லுக்கு அழியச் செய்தே எனப் பழைய வுரை யமைந்தது. ஆயின் பதிப்பாசிரியர் இச் சொல் அழியச்சே என வழங்கும் எனக் குறிப்புரை கொடுத்துள்ளார். இங்ஙனம் குறிப்புரை கூறல் தமிழ் மரபாகுமா என யான் உரைத்துள்ளேன். அதற்குப் பரிவுரையாளர், பதிப்பா சிரியரின் குறிப்புரையின்மேல் உலகியல் மரூஉ முடி பெனத் தாம் ஒரு குறிப்புரை கூறி அரண் செய்கின்றார். பரிவுரையாளர் பகரும் மரூஉ முடிபினியலினைக் கொண்டு கூறின், கிருட்டினனைக், கிட்டு, கிச்சு, என்றலும், சுப்பிர மணியனைச் சுப்டு, சுப்பு என்றலும், வாரேள் போரேள் என்றலும், வாரச்சே, போகச்சே, போச்சே என்றலு மாய ஆரியர் கூறும் தமிழ்ச் சொற்களும், நண்பர் அருணு சலம் 'இன்றைய தமிழ் வசன நடை' என்ற நூலில் கூறும் அம்மாமித் தமிழும், உலகியல் மரூஉ முடிபை யுணர்த்து வனவாக வமையும். இவை யாவும் எக்காலத்தும் மரூஉ முடிபுகளாகா. மற்று யாவையோ வெனின் நகைச்சுவைக்கு நாட்டங் தரும் சொற்களாம். இக் கருத்தாலன்றோ, ஒல் காப்பெரும் புகழ்த் தொல்காப்பியத்திற் குரை யெழுதிய பேராசிரியரும் மெய்ப்பாட்டியல் முதல் நூற்பாவில் நகைச்சுவை தருதற்கு ஆரியர் கூறும் தமிழினை முதலாக எடுத்துரைத்துள்ளார். இஃதறியாத பரிவுரையாளர் மரூஉ முடிபி னிய லறியாது மயலுறுகின்றார்.

இனி, அரம்பு என்பதற்குக் குறும்பெனப் பழைய வுரையும் பண்புற வமைந்தது. ஆயின் பதிப்பாசிரியர்

குறும்பென்பதற்குச் சேஷ்டை யெனக் குறிப்புரை கூறி யுள்ளார். குறும்பு எனப் பழைய வுரை யமைந்த அரம்பு எனுஞ் சொல்லிற்குச் சேஷ்டை என்பது பொருளன்று, சிற்றூ ரென்பதே பொருள் என்ற கருத்தினை யான் வரைந் துள்ளேன். யான் கூறியாங்கு, மூன்ரும் பதிப்பில் உள்ள அரம்பு என்பதற்குச் சேஷ்டை என்ற குறிப்புரை நான்காம் பதிப்பில் இன்மையால் அக் குறிப்புத் தவருன தென்பது நன்கு தெளியப்படும். அக் குறிப்புரையி னுரிமையாளர் செப்பம் செய்து கொண்டதையு மறியாத பரிவுரையாள ரின் செயலை என்னென்பேன். அவர் மொழிப்படி அவர் தம் சேஷ்டையா? அன்றி அறியாமையா! அன்றி அகந் தையா! எதுவாயினும் எம் முறையில் வரினும் ஏற்கத் தமிழ ருளரென எச்சரிக்கின்றேன்.

நான்காம் பதிப்பில் சேஷ்டை யெனும் குறிப்புரை இடம் பெருமையின், இனி அச் சொல் பற்றித் தடைவிடை நிகழ்த்த வேண்டுவதன்று. எனினும், பரிவுரையாளருக் குத் தெளிவுரை தருதற்கே, கீழ்க் காணும் கருத்துக்கள் வரையப்படுகின்றன.

பதிற்றுப்பத்து எனும் தொகை நூலொடு ஒப்பக் கருதும் ஏனைய தொகை நூல்களும் பத்துப் பாட்டும் செல் லரித்துப் போகாது செப்பமாகவே உள்ளன. அவற்றுள் ஆன்ற கருத்துக்கள் அழகுற வமைந்து இலங்குகின்றன. ஏதாவதொரு சொல்லாட்சிக்கோ அன்றிப் பொருளாட் சிக்கோ சான்று தந்து நிலைநிறுத்துங்கால் கால வழக் கறிந்து சான்று தருதல் வேண்டும். அதுவே நிலைபேறு டையதாகும். அங்ஙனமின்றி இலக்கியத்தின் கால வழக் கறியாது எதனையும் எடுத்துக் காட்டப் புகின் இடர்ப் பாடுண்டாம். பதிற்றுப்பத்து போன்ற நூல்களின் கருத் திற்கு அதனெடு காலத்தால், பொருளால், வழக்கினுல் ஒத் திலங்கும் நூல்களின் கருத்தினைச் சான்ருகத் தருதலே சிறப்புடையது. அவ்வாறின்றிப் பிற்கால நூல்களின்

கருத்தினையோ சொல்லாட்சியினையோ சான்று தருதல் சிறப்புடைய தாகாது.

இனி அரம்பு எனும் சொல்லாட்சி யமைந்த இடங்களில் குறும்பு என்ற பொருளுண்மை பெறப்படுத லல்லாமல் சேஷ்டை என்ற பொருள் பெறப்படாமையைச் சங்க கால இலக்கியச் சொல்லாட்சி கொண்டு தெளிக. அரம்பு எனும் சொல்,

'அரம்பு வந் தலைக்கு மாலை
நிரம்பா நீளிடை வருந்துதும் யாமே'

'புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பின்
அறியா மையான் மறந்துதுப் பெதிர்ந்தநின்
பகைவர் நாடுங் கண்டுவந் திசின்.'

என வரும் சங்கப் பாக்களில் ஆட்சி செய்யப்பெற்றமை யறியப்படுகின்றது. ஈரிடத்தும் அரம்பு எனுஞ் சொற்குக் குறும்பென்றே பொருள் கூறிச் சென்றுள்ளனர். உரையாளர்கள், அக் குறும்பு எனும் பல பொருளொரு சொற்குச் சிற்றரண், காட்டரண், அரண், சீறூர், ஊர், சிற்றரசர், வலி, குறு நில மன்னர், குறும்பர் எனப் பல பொருளுண்மை சங்கப் பாக்களிலிருந்து அறியப்படுகின்றது. குறும்பென்பதற்குச் சேஷ்டை எனும் பொருள் பத்துப் பாட்டு எட்டுத் தொகை நூல்களில் யாண்டும் காணப்பட்டிலது. எனவே, அரம்பெனுஞ் சொற்குக் குறும்பெனும் பொருளுண்மையும், அக் குறும் பெனுஞ் சொற்கு மேற் காட்டிய பல பொருளுண்மையும், அவற்றுள் சேஷ்டை எனும் பொருளின்மையும் கண்டு தெளிக. சங்க விலக்கியச் சான்று காண இடம் பெறாத பரிவுரையாளர் பிற் கால இலக்கியச் சான்று கொண்டு கட்டுரையாளர் கருத்தாழத்தைக் காணப் புக்கு ஆழ மறியாமல் காலை விட்டு அவதிப்படும் நிலையினை அறிஞர் காண்பாராக.

இனி, அரம்பு எனுஞ் சொற் பொருளாகிய குறும்பெனுஞ் சொல் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ள இடங்களைக் கொண்டு செம் பொருள் கண்டு தெளிவாராக. குறும் பெனுஞ் சொல்,

'நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லோர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்'

'கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்
எழுந்ததண் ணுமை இடங்கட் பாணி'

'அருங்கலந் தெறுத்த பெரும்புகல் வலத்தர்
வில்கெழு குறும்பிற் கொண்டிமுறை பகுக்கும்'

'புலவுப்புலி துறந்த கலவுக் கழிகடுமுடை
இரவுக் குறும்பலற நூறி நிரைபகுத்து'

'இகழ்ந்தன வாயினும் இடம்பார்த்துப் பகைவர்
ஓம்பினருறையும் கூழ் கெழு குறும்பிற்
குவையிமில் விடையவேற் றூயும்'

'வில்லோர் குறும்பிற் றதும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் பாணியும் கேட்டே'

'கொடுவில் லெயினர் குறும்பிற் கூக்கும்
கடுவினை மறவர் வில்விடத் தொலைந்தோர்'

'வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைக,'

'கதிர் நுழைகல்லா மரம்பயில் கடிமிளை
அருங் குறும் புடுத்த கானப்பேரெயில்'

'வேலே குறும்படைந்த அரண் கடந்தவர்'

'பெருங் குறும்புகுத்த வன்புல இருக்கை'

'குறும்படு குண்டகழ் நீண்மதி லோரே.'

'குறும்பர்க் கெறியும் எவற் றண்ணுமை'

'அருங்குறும் பெருக்கி அயாவுயிர்த் தாங்கு'

'எல்லா இஃதொன்று கூறு குறும்பிவர்-புல்லினத் தார்க்கும்'

'கொடுவில் லெயினக் குறும்பிற் சேப்பின்'

'அரவுக்குறும் பெறிந்த சிறுகட் டீர்வை'

'அருங்குறும் பெறிந்த ஆற்றலொடு பருந்துபட'

எனப் பலவிடங்களினும் ஆட்சி பெற்றிலங்கிய கருத்தறிந்து தெளிக. மேற் கண்ட செய்யு ளடிகளில் ஓரிடத்திலாயினும் குறும்பெனுஞ்சொற்குச் சேஷ்டை என்றபொருள் பெறப் படாமை காண்க. குறும்பிடத்திலுள்ளார் குறும்பர் எனப் பெயர் பெற்ருரன்றி வேறின்மை யறிக. எனவே, அரம்பு எனுஞ் சொற்குக் குறும் பெனும் பொருளுண்மையும், அக் குறும் பெனுஞ் சொல்லிற்குச் சேஷ்டை யென்ற பொருளின்மையும், சீறூர் என்ற பொருளுண்மையும் அறியப்படுகின்றமை கண்டு தெளிக. இங்ஙனம் சொல் லாட்சி பெற்றுப் பொருளறியும் பெற்றி யியையவும், எட்டுத் தொகை நூல்களுள் ஒன்ருகிய பதிற்றுப்பத்து என்ற நூலில் இரண்டாம் பத்திற் கண்ட குறும் பெனும் பொருளுடைய அரம் பெனுஞ் சொல்லுக்குச் சேஷ்டை யென்ற பொருள் பொருந்துமாறு யாங்ஙனம்! இங்ஙன மாகப் பல்லாற்ருனு மறியப்படும் கருத்தினையும், பழந் தமிழ்ச் சொல்லாட்சியினையு மறியாத பரிவுரையாளர், கால வழக்கிய லறியாது கண்டதைக் கூறி மயக் குறுத்த முயலுதல் மாணுச் செயலாம். இனியாவது நற்றமிழுக்கு நலஞ் செய்ய நாட்டங்கொள்ளப் பெறுவாராக.

இதுகாறும் கூறியவாற்ருல், ஆரியர் என்ற சொற்கு முனிவர் என்ற பொருள் பொருந்தா தென்பதும், கட் கொண்டிக் குடிப் பாக்கம் என்பதற்கு நச்சிஞர்க்கினியர் உரையினைப் பதிப்பாசிரியர் எடுத்துக் காட்டியது இழிவை யுணர்த்த வென்பதும், அழியச்சே என்ற ஆரியர் கூறும் தமிழ் மரூஉ முடிபன்று என்பதும், நகைச் சுவைக்குரிய முதற் சொல் என்பதும், குறும் பின் பொருளதாம் அரம் பெனும் சொல்லிற்குச் சேஷ்டை என்பது பொருளன்று என்பதும், சிற்றூர் என்பதே பொருளென்பதும் அறியப் பட்டன. தீந் தமிழியல் தெரித்த ஒளி வுரையினை மெய்ப் பொருள்காணும், மேலோர் தமிழியல் காணும் தக்கார் அனைவரும்ஆய்ந்தறிந்து உளங் கொள்வார்களாக.

நம்செய லொழுக்கங்கள் பற்பல அழிக்க

நாம் விடோ மெனும் நற் றமிழர் வாழ்க.

